श्री :

# श्री मीनाक्षीस्तोत्रम्

## ஸ்ரீ மீனாக்ஷீ ஸ்தோத்ரம்

(1)

श्रीविद्ये शिववामभागनिलये श्रीराजराजार्चिते
श्रीनाथादिगुरुस्वरूपविभवे चिन्तामणीपीठिके ।
श्रीवाणीगिरिजानुतांघ्रिकमले श्रीशाम्भवि श्रीशिवे
मध्याह्ने मलयध्वजाधिपसुते मां पाहि मीनाम्बिके ॥

ஸ்ரீ வித்யே சிவவாமபாக நிலயே ஸ்ரீ ராஜராஜார்சிதே
ஸ்ரீநாதாதி குருஸ்வரூப விபவே சிந்தாமணீபீடிகே ।
ஸ்ரீவாணீகிரிஜா நுதாங்க்ரிகமலே ஸ்ரீ சாம்பவி ஸ்ரீசிவே
மத்யாஹ்நே மலயத்வஜாதிபஸுதே மாம் பாஹி மீனாம்பிகே ।

ஸ்ரீவித்யையாகவும், சிவனின் இடதுபாகத்தில் இருப்பவளும், குபேரனால் பூஜிக்கப்பட்டவளும், ஸ்ரீ நாதர் முதலிய குருவடிவிலே மிளிரும் பெருமை கொண்டவளும், சிந்தாமணி பீடத்தில் இருப்பவளும், ஸ்ரீ ஸரஸ்வதீ, துர்கை தேவியரால் பூஜிக்கப்பட்டவளும், மலயத்வஜன் மகளுமாகிய மீனாம்பிகையே என்னை காத்தருள்வாயே!

(2)

चक्रस्थेऽचपले चराचरजगन्नाथे जगत्पूजिते
आर्तालीवरदे नताभयकरे वक्षोजभारान्विते ।
विद्ये वेदकलापमौलिविदिते विद्युल्लताविग्रहे
मातः पूर्णसुधारसार्द्रहृदये मां पाहि मीनाम्बिके ॥

சக்ரஸ்தே஽சபலே சராசரஜகந்நாதே ஜகத்பூஜிதே
ஆர்தாலீவரதே நதாபயகரே வக்ஷோஜபாரான்விதே ।
வித்யே வேதகலாப மௌலி விதிதே
வித்யுல்லதாவிக்ரஹே
மாத: பூர்ணஸுதாரஸார்த்ரஹ்ருதயே
மாம் பாஹி மீனாம்பிகே ॥

தாயே! அம்ருத ரஸம் நிறைந்து நெகிழ்ந்த ஹ்ருதய முள்ள, மீனாம்பிகே! என்னை காப்பாய்! நீ ஸ்ரீசக்ரத்தில் ஸ்திரமாய் இருப்பவள். சராசர ஜகத்துக்கு நீயே தலைவி! உலகமனைத்தும் உன்னை பூஜிக்கிறது. எளியோரை வரமளித்தும், வணங்கியவரை தேற்றியும், திரண்ட மார்பகங்களுடன் காட்சியளிக்கிறாய். நீ வித்யாரூபிணி. உபநிஷத் பொருளாய், மின்னலேயுருவாய் விளங்குகிறாய்.

(3)

कोटीराङ्गदरत्नकुण्डलधरे कोदण्डवाणाञ्चिते
कोकाकारकुचद्वयोपरिलसत्प्रालम्बिहाराञ्चिते ।
शिञ्जन्नूपुरपादसारसमणिश्रीपादुकालंकृते
मद्दारिद्र्यभुजङ्गगारुडखगे मां पाहि मीनाम्बिके ॥

கோடீராங்கத ரத்னகுண்டலதரே
கோதண்ட பாணாஞ்சிதே
கோகாகார குசத்வயோபரி லஸத்
ப்ராலம்பி ஹாராஞ்சிதே ।
சிஞ்ஜந்நூபுர பாதஸாரஸ மணி
ஸ்ரீ பாதுகாலங்க்ருதே
மத்தாரித்ர்ய புஜங்க காருடககே
மாம் பாஹி மீனாம்பிகே ॥

கிரீடம், தோள்வளை, ரத்ன குண்டலங்களை தரித்தவளும், கோதண்டம், பாணம் இவற்றை கையில் ஏந்தியவளும், சக்ரவாகம் போன்ற மார்பகங்களில் மிளிரும் நீண்ட ஹாரங்களை யுடைவளும், ஒலிக்கும் காற்சதங்கையும், அழகிய பாதுகைகளும் அழகு சேர்க்க, என் ஏழ்மையாகிய பாம்பிற்கு கருடனாயிருப்பவளுமான ஸ்ரீ மீனாக்ஷி தேவியே! என்னைக் காப்பாயாக!

(4)

ब्रह्मेशाच्युतगीयमानचरिते प्रेतासनान्तस्थिते
पाशोदङ्कुशचापबाणकलिते बालेन्दुचूडाञ्चिते ।
बाले बालकुरङ्गलोलनयने बालार्ककोट्युज्वले
मुद्राराधितदेवते मुनिनुते मां पाहि मीनाम्बिके ॥

ப்ரஹ்மேசாச்யுத கீயமானசரிதே
ப்ரேதாஸனாந்த: ஸ்திதே
பாசோதங்குச சாபபாணகலிதே
பாலேந்து சூடாஞ்சிதே!
பாலே பாலகுரங்கலோல நயனே
பாலார்ககோட்யுஜ்வலே
முத்ரா ராதிததேவதே முனிநுதே
மாம் பாஹி மீனாம்பிகே||

ப்ரம்மா, பரமேச்வரன், விஷ்ணு ஆகியோர் போற்றிப் பாடும் சரிதம் உடையவளே! ப்ரேதாஸனத்தில் வீற்றிருப்பவளே! பாசம், அங்குசம், வில், பாணம் இவற்றை வைத்திருப்பவளே! இளம் சந்திரனை அணிந்தவளே! மான்குட்டியின் மிரண்ட கண்கள் போன்ற கண்களையுடையவளே, பாலசூர்யனை யொத்து பிரகாசிப்பவளே! முத்திரைகளால் ஆராதிக்கப் பட்டவளே! முனிவர்கள் ஸ்தோத்ரம் செய்யும் மீனாம்பிகையே என்னை காத்தருள்!

(5)

गन्धर्वामरयक्षपन्नगनुते गङ्गाधरालिङ्गिते
गायत्रीगरुडासने कमलजे सुश्यामले सुस्थिते ।
खातीते खलदारुपावकशिखे खद्योतकोट्युज्ज्वले
मन्त्राराधितदेवते मुनिनुते मां पाहि मीनाम्बिके ॥

கந்தர்வாமரயக்ஷ பந்நகநுதே
கங்காதராலிங்கிதே
காயத்ரீகருடாஸனே கமலஜே
ஸுச்யாமலே ஸுஸ்திதே!

காதீதே கலதாரு பாவகசிகே
கத்யோதகோடயுஜ்வலே
மந்த்ரா ராதிததேவதே முனிநுதே
மாம் பாஹி மீனாம்பிகே॥

கந்தர்வர்கள், தேவர்கள், யக்ஷர்கள், நாகங்கள் ஆகியோரால் போற்றப்பட்டவளே, பரமேச்வரரால் அணையப்பட்டவளே! காயத்ரீ போன்று கருடாஸனம் கொண்டவளே, தாமரையில் தோன்றி நன்கு அமர்ந்த ச்யாமலையே! ஆகாயம் கடந்தவளே! அக்னி ஜ்வாலையாக இருப்பவளே, ஆயிரமாயிரம் மின்மினி பூச்சி போன்று பிரகாசிப்பவளே, மந்திரங்களால் முனிவர் ஸ்தோத்ரம் செய்யப்பட்டவளுமான மீனாம்பிகையே என்னை காப்பாய்!

**(6)**

नादे नारदतुम्बुराद्यविनुते नादान्तनादात्मिके
नित्ये नीललतात्मिके निरुपमे नीवारशूकोपमे ।
कान्ते कामकले कदम्बनिलये कामेश्वराङ्कस्थिते
मद्विद्ये मदभीष्टकल्पलतिके मां पाहि मीनाम्बिके ॥

நாதே நாரததும்புராத்யவிநுதே நாதாந்த நாதாத்மிகே
நித்யே நீலலதாத்மிகே நிருபமே நீவாரசூகோபமே!
காந்தே காமகலே கதம்ப நிலயே காமேச்வராங்கஸ்திதே
மத்வித்யே மதபீஷ்டகல்பலதிகே மாம் பாஹி
மீனாம்பிகே॥

நாதஸ்வரூபிணியாயும், நாரதர், தும்புரு முதலியோரால் வணங்கப்பட்டவளாயும், நாதமுடிவில் நாதமாய் இருப்பவளும், நித்யமாயும், நீலக் கொடியாயிருப்பவளும், நிகரற்றவளாயும், நீவாரதான்யத்தின் முனையாயிருப்பவளும், அழகிய காமகலையாய் கதம்ப மரத்தடியில் காமேச்வரனின் மடியில் தவழ்பவளாயும், எனது வித்யையாய் எனது விருப்பங்களை நிறைவேற்றும் கல்பகமாயுமிருக்கிற ஹே மீனாம்பிகே என்னை காப்பாற்றி விடு.

(7)

वीणानादनिमीलितार्धनयने विस्रस्तचूलीभरे
ताम्बूलारुणपल्लवाधरयुते ताटङ्कहारान्विते ।
श्यामे चन्द्रकलावतंसकलिते कस्तूरिकाफालिके
पूर्णे पूर्णकलाभिरामवदने मां पाहि मीनाम्बिके ॥

வீணா நாத நிமீலிதார்த நயனே விஸ்ரஸ்த சூளீபரே
தாம்பூலாருண பல்லவாதரயுதே தாடங்க
ஹாரான்விதே!
ச்யாமே சந்த்ர கலாவதம்ஸ கலிதே கஸ்தூரிகாபாலிகே
பூர்ணே பூர்ண கலாபிராம வதனே மாம் பாஹி
மீனாம்பிகே॥

வீணை நாதத்தில் பகுதி மூடிய கண்களையுடையவளே, சற்றே அவிழ்ந்த தலைமுடியையுடையவளே, தாம்பூலத்தால் துளிர்போல சிவந்த உதடு உடையவளே! காதோலை, ஹாரம் அணிந்தவளே! கருநீலநிறமானவளே! பூர்ணசந்திரன் போன்ற அழகிய முகமுள்ளவளே மீனாம்பிகையே! என்னை காப்பாயாக!

(8)

शब्दब्रह्ममयी चराचरमयी ज्योतिर्मयी वाङ्मयी
नित्यानन्दमयी निरञ्जनमयी तत्त्वंमयी चिन्मयी ।
तत्त्वातीतमयी परात्परमयी मायामयी श्रीमयी
सर्वैश्वर्यमयी सदाशिवमयी मां पाहि मीनाम्बिके ॥

சப்த ப்ரஹ்மமயீ சராசரமயீ ஜ்யோதிர்மயீ வாங்மயீ
நித்யானந்தமயீ நிரஞ்ஜனமயீ தத்வம்மயீ சின்மயீ
தத்வாதீதமயீ பராத்பரமயீ மாயாமயீ ஸ்ரீமயீ
ஸர்வைச்வர்யமயீ ஸதாசிவமயீ மாம் பாஹி
மீனாம்பிகே॥

சப்தபிரம்மமாயிருப்பவளும், சராசரமேயுருவானவளும், ஒளிமயமாயிருப்பவளும், வாக்ஸ்வரூபிணியாயும், சாச்வத ஆனந்தமயமாயிருப்பவளும், மாசற்ற தத்வ ஜ்ஞானமாயிருப்பவளும், தத்வம் கடந்து, பரத்தைக் கடந்த நிலையிலிருப்பவளும், மாயா லக்ஷ்மீ ரூபிணியாயும், எல்லா ஐச்வர்ய ரூபிணியாயும், ஸதாசிவமயமாகவும் திகழும் ஹே மீனாம்பிகே என்னை காப்பாயாக!

மீனாக்ஷீ ஸ்தோத்ரம் முற்றிற்று

